## திருக்குடவாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

இகழுந்திருமாலொடுநான்முகனும், புகழும்பெருமானடியார்புகல
மகிழும்பெருமான்குடவாயின்மன்னி, நிகழும்பெருங்கோயினிலாயவனே.

கடுவாய்மலிநீர்குடவாயிறனி, நெடுமாபெருங்கோயினிலாயவனைத்
தடமார்புகலித்தமிழார்விரகன், வடமார்தமிழ்வல்லவர்நல்லவரே.

திருச்சிற்றம்பலம்.

## திருநறையூர் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

நேரியனாகுமல்லனொருபாலுமேனியரியானமுனையவொளிபா
னீரியல்காலுமாகிநிறைவானுமாகியுறுதீயுமாயநிமல
னூரியல்பிச்சைபேணியுலகங்களேத்தநலகண்டுபண்டுசுடலை
நாரியோர்பாகமாகநடமாடவல்லநறையூரினம்பனவனே.

கானலுலாவியோதமெதிர்மல்குகாழிமிகுபந்தன்முந்தியுணர
ஞானமுலாவுசிந்தையடிவைத்துகந்தநறையூரினம்பனவனை
யீனமிலாதவண்ணமிசையாலுரைத்ததமிழ்மாலைபத்துமிவைவா
வானநிலாவவல்லார்நிலமெங்குநின்றுவழிபாடுசெய்யுமிகவே.

திருச்சிற்றம்பலம்.

## திருப்புத்தூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலைத், திங்களோடுதிளைக்குந்திருப்புத்
கங்கைதங்குமுடியாரவர்போலும், மெங்களுச்சியுறையுமிறையாரே. [தூர்

நல்லகேள்விஞானசம்பந்தன், செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்று, மல்லல்திருமலையுடையாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருச்சிவபுரம் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

இன்குரலிசைகெழுமியாழ்முரலத், தன்கரமருவியசதுரனகர்
பொன்கரைபொருபழங்காவிரியின், றென்கரைமருவியசிவபுரமே.

சிவனுறைதருசிவபுரநகரைக், கவுணியர்குலபதிகாழியர்கோன்
றவமல்குதமிழிவைசொல்லவல்லார், நவமொடுசிவகதிநண்ணுவரே.

திருச்சிற்றம்பலம்.

அலைபுனலாவடுதுறையமர்ந்த, இலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன, விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகம்
நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே.

திருச்சிற்றம்பலம்.

அப்பொழுது பரமசிவனுடைய திருவருளினாலே, ஒருபூதம்விரைந்துவந்து பீடத்தினமேலே ஆயிரம் பொன்பொருந்திய கிழி ஒன்றுவைத்து, முன்னே நின்று, இந்தக்கிழி பொன்னுலவாக்கிழி, இது பரமசிவனால் உமக்கு அருளிச்செய்யப்பட்டது என்று சொல்லபிள்ளையார் திருவருளை நினைந்து நமஸ்கரித்து எழுந்துகும்பிட்டு, பீடத்தின்மேலே வைக்கப்பட்ட பொற்கிழியை எடுத்துக்கொண்டு, தந்தையார் கையிற்கொடுத்து, பரமசிவனையே தலைவராக நினைந்து வேதவிதிப்படி செய்யப்படும் யாகத்தை நீரும் சீர்காழியில் இருக்கின்ற மறைப்பிராமணர்கள் சமஸ்தரும்செய்ய இக்கிழிகுறையாது மிகும் என்றுசொல்லி, சீர்காழிக்குப்போகும்படி அவருக்கு விடைகொடுத்து அனுப்பி தாம் திருவாவடுதுறையில் இருந்தார், சிலநாட்சென்றபின் அவ்விடத்தை அகன்று, கோழம்பம், வைகன்மாடக்கோயில், நல்லம், அழுந்தூர், துருத்தி, மாயூரம், செம்பொன்பள்ளி, விளநகர் பறியலூர், வேட்டக்குடி என்னுமன்தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருப்பதிகங்கள் பாடி தருமபுரத்தை அடைந்தார்

---

## திருக்கோழம்பம் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீறுற்றனைநீளசடைமேனிறைவிளமதா, ராதரனையழகமாமென்முலையாளையோர்
கூற்றனைகுளிர்பொழிற்கோழம்பமேவிய, வேற்றனையேறமிறுமிடர்கவே.

தண்புனலோங்குதண்ணநதாய்மாநகா, நணபுடைஞானசம்பந்தனம்பானுறை
விண்பொழிற்கோழம்பமேவியபத்திவை டணகொளப்பாடவல்லார்க்கிலலைப்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவைகல்மாடக்கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

துளமதியுடைமறிதோன்றுகையின, ரிளமதியணிசடையெந்தையாரிட
முளமதியுடையவர்வைகலோங்கிய, வளமதிதடவியமாடக்கோயிலே.

[ணசம்
மைந்தனதிடம்வைகன்மாடக்கோயிலைச், சந்தமர்பொழிலணிசண்பைஞா
பந்தனதமிழ்கெழுபாடல்பத்திவை, சிந்தைசெய்பவர்சிவலோகஞ்சேர்வரே

திருச்சிற்றம்பலம்.

## திருநல்லம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

கல்லானிழல்மேயகறைசேர்கண்டாவென்
றெல்லாமொழியாலுமிமையோர்தொழுதேத்த
வில்லாலெயின்மூன்றும்வெந்துவிழவெய்த
நல்லானமையாள்வானல்லநகரானே.

நலமார்தருமறையோர்வாழ்நல்லநகர்மேய
கொலைசேர்மழுவானைக்கொச்சையமர்ந்தோங்கு
நலமார்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
கலைகளிவைவல்லார்கவலைகழிவாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருஅழுந்தூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொழுமாறுவல்லார்துயர்தீரநினைந், தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
யழுமாறுவல்லாரழுந்தைம்மறையோர், வழிபாடுசெய்மாமடமன்னினையே.

[வனை

அருஞானம்வல்லாரழுந்தைம்மறையோர், பெருஞானமுடைப்பெருமான
திருஞானசம்பந்தன்செந்தமிழ்கள், உருஞானமுண்டாமுணர்ந்தார்தமக்கே.

திருச்சிற்றம்பலம்.

## திருத்துருத்தி - திருவிராகம் பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்துலாவுகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினா
யுரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே.

கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்துணற்றமிழ்
சுற்றமுற்றுமாயினானவன்பகர்ந்தசொற்களாற்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே.

திருச்சிற்றம்பலம்.

## திருமயிலாடுதுறை - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

கரவின்றிநன்மாமலர்கொண், டிரவும்பகலுந்தொழுவார்கள்
சிரமொன்றியசெஞ்சடையான்வாழ், வரமாமயிலாடுதுறையே.

பின்பு பெரும்பாணர் அப்பதிகவிசையைத் தம்முடைய யாழ்நரம்பிலே முன்போல இட்டு வாசிக்கப்புக அது அதனிடத்தே அடங்கிற்றில்லை அப்பொழுது பெரும்பாணர் அதனைவிட்டு அச்சங்கொண்டு பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து சுவாமி அருளிச்செய்த திருப்பதிகத்தினிசையை யாழிலே ஏற்றுவேன் என்று சொல்லப்பண்ணியது இந்த யாழ் அன்றோ என்று அதனை முரிக்கும்படி ஓங்கினார். உடனே பிள்ளையார் தடுத்தருளி ஐயரே இந்தயாழைத் தாரும் என்று வாங்கிக்கொண்டு ஐயரே நீர் இந்த யாழை முரிப்பது என்னை. சிவனும் பார்வதியம்மையும் அருளிச்செய்த திருவருளின் பெருமையெல்லாம் இந்தக்கருவியில் அளவுபடுமோ மனசினாலும் அளவுபடாததை நீர் இந்த யாழைக்கொண்டே சுவாமியுடைய திருப்பதிகவிசையை யென்றளவு இதில் அமைத்துவாசியும் என்று சொல்லிப் பெரும்பாணர் கையிலே யாழைக்கொடுத்தார். பெரும்பாணர் பிள்ளையாரைத் தொழுது, யாழை வாங்கி சிரமேற்கொண்டார். சிலநாட் சென்றபின் பிள்ளையார் தருமபுரத்தை அகன்று திருநள்ளாற்றையடைந்து கோயிலிற் பிரவேசித்து சுவாமியை வணங்கி, "போகமார்த்தபூண்முலையாள்" என்னும் திருப்பதிகத்தை யாழ்நரம்பிலே இசைகூடும்படிப்பாடி முடித்து பிறகு நீலகண்டப் பெரும்பாணரைக்கொண்டு யாழில் இட்டு வாசிக்கும்படி பணித்து கரந் திருத்தாளங்கொண்டு பாடியருளினார்.

---

## திருநள்ளாறு - பண் பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

போகமார்த்தபூண்முலையாள் தன்னோடும்பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மேல்
நாகமார்த்தநம்பெருமான்மேய நள்ளாறே.

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மன்னுகாழி ஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்திவைவல்லார்
நண்புநீங்காவானவரோடுலகிலுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு பெரும்பாணர் அப்பதிகவிசையை யாழில் இட்டு வாசித்தார். அதுகேட்டுப் பிள்ளையார் திருவுளமகிழ்ந்தருளினார், பின் பிள்ளையார் திருநள்ளாற்றினின்றும் நீங்கி சாத்தமங்கைக்குச் சமீபித்து, அந்தத் திருப்பதியினின்று வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய திருநீலநக்கநாயனை

ரோடு சென்று அயவந்தி என்னும் ஆலயத்திற்சென்று சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு திருநீலநக்கநாயனாருடைய வீட்டுக்குப்போய்த் திருவமுது செய்து அன்றிரவு அங்கே பள்ளிகொண்டார், மற்றநாள் பிராதக்காலத்தில்திருநீலநக்கநாயனாரோடும் அயவந்தியிற் சென்று சுவாமி தரிசனஞ்செய்து திருநீலநக்கநாயனாரைச் சிறப்பித்துத் திருப்பதிகம்பாடியருளினார்.

## திருச்சாத்தமங்கை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலைதிளைக்குமதிசென்னிவைத்தீர்
இருமலர்க்கண்ணிதன்னொடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தியயவந்தியமர்ந்தவனே.

மறையினார்மல்குகாழித்தமிழ்ஞானசம்பந்தன்மன்னு
நிறையினார்நீலநக்கனெடுமாநகரென்றுதொண்டர்
அறையுமூர்சாத்தமங்கையயவந்திமேலாய்ந்தபத்து
முறைமையாலேத்தவல்லாரிமையோரிலுமுந்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சிலநாளாயினபின் திருநீலநக்கநாயனாருக்கு விடைகொடுத்து, சாத்தமங்கையைநீங்கி நாகைக்காரோணம், கீழ்வேளூர் என்னும் ஸ்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு பிறதலங்களையும் வணங்கும்படியெழுந்தருளினார்.

## திருக்கடனாகைக்காரோணம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

கூனற்றிங்கட்குறுங்கண்ணிகான்றநெடுவெண்ணிலா
வேனற்பூத்தராங்கோதையொடும்விரவுஞ்சடை
வானநாடனமரர்பெருமாற்கிடமாவது
கானல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே.

மல்குதண்பூம்புனல்வாய்க்கொழுகும்வயற்காழியா
னல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்முன்
வல்லாறேபுனைந்தேத்துங்காரோணத்துவண்டமிழ்
சொல்லுவார்க்குமிவைகேட்பவர்க்குந்துயரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

ஷவைத்தியர் வந்து தீர்க்கவும் தீராதாயிற்று விடியற்காலத்திலே அக்கன்னிகை மிகஅயர்ந்து புலம்பி கோயிலின்வாயிற் றிக்கைநோக்கி கைதொழுது தேவர்கள் உய்யும்பொருட்டு நஞ்சை அமுதாக்கிய கடவுளே வெந்து பொடியாகிய மன்மதனுடைய உயிரை அவன் மனைவியாகிய இரதிவேண்ட அருளிச்செய்த கருணாநிதியே மார்க்கண்டர்பொருட்டு இயமனை உதைத்த திருவடித்தாமரைகளையுடையவரே, திருமருகலில் வீற்றிருக்கும் பரமசிவனே தேவரீர் இந்தக்கொடிய விஷம் நீங்கும்பொருட்டும் அடியென்துக்கசாகரத்தினின்று கரையேறும் பொருட்டும் அருள் செய்யும் என்று ஸ்தோத்திரம் பண்ணினாள். அவ்வோசையைச் சுவாமி தரிசனஞ்செய்யும்படி எழுந்தருளிவருகின்ற திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் கேட்டு திருவுளம் இரங்கி அவளுக்கு அருள்செய்யும் பொருட்டு அடியார்களோடு எழுந்தருளி நின்று அவளைநோக்கி பயப்படேல், நிகழ்ந்த சமாசாரத்தைச் சொல்லென்று வினவியருளினார். கன்னிகை கண்ணீர் சொரிய பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்துநின்று வைப்பூரில் இருக்கின்ற என்பிதாவுக்குப் புத்திரிகள் எழுவர். அவர்களில் என்னையொழிய மூத்தோர் அறுவரையும் தன் மருமகனாகிய இவனுக்கே விவாகஞ்செய்து கொடுப்பேன் என்று சொல்லி பிறரிடத்திலே திரவியம் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு விவாகஞ்செய்து கொடுத்துவிட்டான் அதுகண்டு மனம்வருந்தமுற்று இவனுக்கே நான் மனைவியாதல் வேண்டுமென நினைந்து, என் பிதாமாதாக்களை மறந்து இவனையே சார்ந்துவந்தேன் இவனும் பாம்பினிலே தீண்டப்பட்டு இறந்தான். அடியேன் கடலிலே கலங்கவிழப் பெற்றார்போல திகைக்கின்றேன் தேவரீர் எழுந்தருளிவந்து அடியேனுடைய துன்பமெல்லாம் நீங்க அருள் செய்தீரென்றாள். பிள்ளையார் விஷம் நீங்கும்பொருட்டு திருமருகற்கடவுள்மேல் திருப்பதிகம் பாடியருளினார்.

---

## திருமருகல்விடந்தீர்த்த திருப்பதிகம் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

சடையாயெனுமால் சரணீயெனுமால், விடையாயெனுமால் வெருவாவிழுமால்
மடையார்குவளை மலரும்மருகல், லுடையாய்தகுமோவிவளுண்மெலிவே.

வயஞானம்வல்லார் மருகற்பெருமா, னுயர்ஞானமுணர்ந் தடியுள்குதலா
லியன்ஞானசம்பந் தன்பாடல்வல்லார், வியன்ஞாலமெல்லாம் விளங்கும்புகழே.

திருச்சிற்றம்பலம்.

உடனே வணிகன் விடந்தீர்ந்து எழுந்து பிள்ளையாரை நமஸ்கரித்தான். அதுகண்ட திருத்தொண்டர்களெல்லாரும் ஆரவாரித்தார்கள் கன்னிகை மனமகிழ்ந்து பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்துவணங்கினாள்

பிள்ளையார் அக்கன்னிகையையும் வணிகனையும் மணம்புணரும்படிசெய்து அவர்களுக்கு விடைகொடுத்து அங்கே இருந்தார். இருக்குநாளிலே சிறுத்தொண்டநாயனார் பிரார்த்திக்க, பிள்ளையார் மீண்டும் செங்காட்டங்குடிக்கு எழுந்தருள விரும்பி அடியாரொடும் அத்திருமருகற் கோயிலிற்சென்று வணங்க, பரமசிவன் தாம செங்காட்டங் குடியிலிருக்கின்ற திருக்கோலத்தை அவருக்குக் காட்டியருளினார். பிள்ளையார் அதைக்கண்டு மனமகிழ்ந்து பதிகம்பாடி அந்தத் திருப்பதியிலே தங்கியிருந்தார்.

---

திருமருகலுந் திருச்செங்காட்டங்குடியும் வினவுரை பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

அங்கமும்வேதமுமோதுநாவரந்தணர்நாளுமடிபரவ
மங்குல்மதிதவழ்மாடவீதிமருகல்நிலாவியமைந்தசொல்லாய்
செங்கயலார்புனற்செல்வமல்குசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கங்குல்விளங்கெரியேந்தியாடுங்கணபதியீச்சரங்காமுறவே.

நாலுங்குலைக்கமுகோங்குகாழிஞானசம்பந்தனலந்திகழு
மாலின்மதிதவழ்மாடமோங்கும் மருகலின்மற்றதன்மேல்மொழிந்த
சேலுங்கயலுந்திளைத்தகண்ணார்சீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
சூலம்வல்லான்கழலேத்துபாடல்சொல்லவல்லார்வினையில்லையாமே.

திருச்சிற்றம்பலம்.

சிலநாட்சென்றபின், அப்பதியை நீங்கி, தம்மைத்தொடர்ந்த சிறுத்தொண்டநாயனாருக்கு விடைகொடுத்து சிவஸ்தலங்கள் பலவற்றை வணங்கிக்கொண்டு திருப்புகலூருக்குச் சமீபித்து அப்பதியினின்று வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய முருகநாயனார் முதலிய அடியார்களோடுசென்று கோயிலை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து முருகநாயனாருடைய திருமடத்திலேபோய் அவர் உபசரிக்க வீற்றிருந்தார். இருக்குநாளிலே வர்த்தமானீச்சரத்தை வணங்கி முருகநாயனாருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடியருளினார்.

---

திருப்புகலூர் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

வாழ்ந்தநாளுமினிவாழுநாளுமிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம்பெருமானையேத்தாவிதியில்லிகாள்
போழ்ந்ததிங்கட்புரிசடையினான்றன்புகலூரையே
சூழ்ந்தவுள்ளமுடையீர்களுங்கடுயர்தீருமே.

புகலியார்தம்பெரியோர்கடாந்தும்புகலூர்தனுள்
வெந்தசாம்பற்பொடிப்பூசவல்லவிறையூர்தனைய
யந்தமில்லாவன்பொடவர்பணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடியாடக்கெடும்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

## திருப்புகலூர்வர்த்தமானீச்சரம் - பண்-பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

ஈசனேறமர்கடவுளின்னமிர்தெந்தைஎம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீறர்பொலிவுடைப்பூம்புகலூரின்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செய்முடிமேல்
வாசமாமலருடையார்வர்த்தமானீச்சரத்தாரே.

பொங்குதண்புனல்சூழ்ந்துபோதணிபொழிற்புகலூரின்
மங்குன்மாமதிதவழும்வர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்புகழ்ஞானசம்பந்தன்றண்டமிழ்பத்து
மெங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே.

திருச்சிற்றம்பலம்.

அங்கேயிருக்குங்காலத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாரூரை வணங்கிக்கொண்டு திருப்புகலூரை வணங்குதற்கு அடியார்களோடும் எழுந்தருளும் செய்தியைக் கேட்டு அத்தியந்த ஆசையோடு அவரை எதிர்கொள்ளும்பொருட்டுத் திருக்கூட்டத்தோடும் திருப்புகலூரின் எல்லையைக் கடந்து சென்றார். திருநாவுக்கரசு சுவாமிகளும் பிள்ளையாருக்கு எதிரேவந்தார். இருவரும் பரஸ்பரம் நமஸ்காரம்பண்ணி நல்வரவு சொல்லி மகிழ்ந்தார்கள். அப்போது பிள்ளையார் அப்பமூர்த்தியை நோக்கி அப்பரே நீர் வரும்நாளில் திருவாரூரில் நிகழ்ந்த சிறப்பைச் சொல்லும் என்று சொல்ல அப்பமூர்த்தி திருவாதிரைச் சிறப்பைத் திருப்பதிகத்தினாலே சொல்லியருளினார். பிள்ளையார் அதைக்கேட்டுத் திருவாரூருக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு மீண்டு இவ்விடத்தில் வந்து உம்முடன் இருப்பேன் என்றுசொல்லி அப்பமூர்த்தி திருப்புகலூருக்குப் போகத் தாம் சென்று விற்குடியை வணங்கிக்கொண்டு திருவாரூரை அடைந்து வன்மீகநாதரை வணங்கிப் பதிகம்பாடி அப்பதியில் இருந்தார்.

---

## திருஆரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாடலனான்மறையன்படிபட்டகோலத்தன்றிங்கள
சூடலன்மூவிலைபசூலம்வலனேந்திக்
கூடலர்மூவெயிலுமெரியுணக்கூரெரிகொண்டெல்லி
யாடலனாதிரையனாரூரமர்ந்தானே.

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தனல்ல
வல்லிமலர்க்கழனியாரூரமர்ந்தானை
வல்லதோரிச்சையினால்வழிபாடிவைபத்தும்வாய்க்கச்
சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருவிற்குடி வீரட்டானம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிகொண்மேனியர்வானமாமதியினர்நதியினர்மதுவார்ந்த
கடிகொள்கொன்றையஞ்சடையினர்கொடியினருடைபுலியதளார்ப்பர்
விடையதேறுமெம்மானமர்ந்தினிதுறைவிற்குடிவீரட்ட
மடியராகிநின்றேத்தவல்லார்தமையருவினையடையாவே.

விலங்கலேசிலையிடமெனவுடையவன்விற்குடிவீரட்டத்
திலங்குசோதியையெம்பெருமான்றனையெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனறமிழ்மாலை
வலங்கொடேயிசைமொழியுமின்மொழிந்தக்கான்மற்றீதுவரமாமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

உள்ளமோரிச்சையினாலுகந்தேத்தித்தொழுமின்றொண்டர்மெய்யே
கள்ளமொழிந்திடுமின்கரவாதிருபொழுதும்
வெள்ளமோர்வார்சடைமேற்கரந்திட்டவெள்ளேற்றான்மேய
வள்ளறுகன்கழனியாரூரடைவோமே.

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தனல்ல
வல்லிமலர்க்கழனியாரூரமர்ந்தானை
வல்லதோரிச்சையினால்வழிபாடிவைபத்தும்வாய்க்கச்
சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர்த் திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிர்ப்புகர்
நெருக்கிவாயநித்திலநிரக்குநீள்பொருப்பனார்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைக்கொடி
யருக்கன்மண்டலத்தளாவுமந்தணாரூரென்பதே.

வல்லிசோலைசூழ்தரு மென்னுயிர் பொன்னுலா
வல்லிமாதமர்ந்திருந்தவந்தனை நாடியை
நல்லசொல்லுஞானசம்பந்தனை வினையுரை
வல்லதொண்டர்வானமாளவல்லர்வாய்மையாகவே.

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சித்தந்தெளிவீர்கா, ளத்தனாரூரைப், பத்திமலர்தூவ, முத்தியாகுமே.
சீரூர்சம்பந்த, ஞானசம்பந்தன், பாரூர் பாடலார், பேரார்இன்பமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அந்தமாயுலகாதியுமாயினார், வெந்தவெண்பொடிப்பூசியவேதியன்
சிந்தைதெய்வப்புகுந்தான் திருவாரூரம்மான், மைந்தனைக்காலனைப் பறிகொளுங்கொலோ.

வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடு கூவிளம், பொன்னியன்றசடையிற் பொலிவித்தபிரான் திருவாரூரை
மன்னுகாழியுள் ஞானசம்பந்தன்வாய், பன்னுபாடல்வல்லார்க்கில்லைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

பின் அங்குள்ள அநேகவிடங்களிலும் ஆலயத்தையும் காலந்தோறும் பணிந்தார். அங்கு நின்றும் திருவலிவலம், கோளிலிமுதலிய ஸ்தலங்களுக்குப்போய் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு திருப்பதிகம் பாடியருளினார்.

---

## திருவலிவலம் திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுதல், வேயியல்தோளுமைபங்கனெழில் விழியுமையவண்
மேவியதிருவுருவுடையவன்விமலன், மாவியலுமைபொழிலிவலமுறையிறையே.

மானியல்வலிவலநகருறையிறைவனை, யிசையியல்பழுநகர்ஞானசம்பந்தன்மறை
தன்னியல்கலைவலதமிழ்விரகனதுரை, யுரைபுகழொருபதுமுயாபொருடருமே.

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோளிலி - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

நாளாயபோகாமே நஞ்சணியுங்கண்டனுக்கே
யாளாயவன்புசெய்வோம் மடநெஞ்சே யரனாமங்
கேளாய்நங்கிளைகிளைக்குங் கேடுபடாத்திறமருளிக்
கோளாயநீக்குமவன் கோளிலியெம்பெருமானே.

நம்பனைநல்லடியார்கணாமுடைமாடென்றிருக்குங்
கொம்பனையாள்பாகனெழிற்கோளிலியெம்பெருமானை
வம்பமருந்தண்காழிச்சம்பந்தன்வண்டமிழ்கொண்
டின்பமரவல்லார்களெய்துவர்களீசனையே.

திருச்சிற்றம்பலம்.

### திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சுதோயச்சட்டவுண்டு
சிவனதாட்சிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினாயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்ட
னவனதாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே.

பல்லிதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூர
னல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனாரு
ரெல்லியம்போதெரியாடுமெம்மீசனையேத்துபாடல்
சொல்லவேவல்லவார்தீதிலரோதநீர்வையகத்தே.

திருச்சிற்றம்பலம்.

மீண்டும் அத்திருவாரூரில் வந்து இருந்தார். சிலநாளாயினபின் திருநாவுக்கரசு சுவாமிகளைக் காணுதற்கு விரும்பி திருவாரூரை நீங்கி பனையூரிற்சென்று சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு திருப்பதிகம்பாடியருளினார்.



### திருப்பனையூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரவச்சடைமேல்மதிமத்தம், விரவிப்பொலிகின்றவனூரா
நிரவிப்பலதொண்டர்கணாளும், பரவிப்பொலியும்பனையூரே.

பாரார்விடையான்பனையூர்மேற், சீரார்தமிழ்ஞானசம்பந்த
னாறசொன்னமாலைகள்பத்து, மூரார்நின்னைவாருயாவாமே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு திருப்புகலூருக்குச் சமீபித்து அப்பதியினின்று வந்து தம்மை எதிர்கொண்ட அப்பமூர்த்தி, முருகநாயனார் முதலாகிய திருத்தொண்டர்களோடும்போய் சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு திருப்பதிகம் பாடியருளினார்.



## திருப்புகலூர் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

குறிகலந்தவிசைபாடலினனசையாலிவ்வுலகெல்லா
நெறிகலந்ததொருசீர்மையனுயெறுதேறும்பலிபேணி
முறிகலந்ததொருதோலரைமேலுடையானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழிலசூழ்ந்தயலேபுயலாரும்புகலூரே.

புற்றில்வாழுமரவமமரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றநல்லவர்காழியுள்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றும்மிசைபாடியமாந்தாபரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு முருகநாயனுருடைய திருமடத்தை அடைந்து அங்கே இருந்தருளினர். இருக்கும் நாளிலே திருநீலநக்கநாயனரும் சிறுத்தொண்டநாயனரும் அவ்விடத்திற்குவந்து அவர்களோடு இருந்தார்கள். சிலதினஞ்சென்றபின் பிள்ளையாரும் அப்பமூர்த்தியும் பிறதலங்களை வணங்க விரும்பிப் புறப்பட்டு முருகநாயனுரை அங்கே இருக்கவும் திருநீலநக்கநாயனரையும் சிறுத்தொண்டநாயனரையும் தங்கள் தங்கள் ஊருக்குச்செல்லவும் ஏவினராகள் பிள்ளையார் அப்பமூர்த்தியைவிட்டுப் பிரியாமல் முத்துச்சிவிகைபின்வர வழிக்கொள்ளும்பொழுது அப்பமூர்த்தி பிள்ளையாரை நோக்கி பரமசிவன் தேவரீருக்கு அருளிச்செய்த இம்முத்துச்சிவிகையின்மேலே எழுந்தருளும் என்றுசொல்ல பிள்ளையார் நீர் அடியார்களோடும் எங்கே முன்போவீரோ அங்கே நான் பின்வருவேன் என்றார். அப்பமூர்த்தி தேவரீர் அருளிச்செய்தபடியே செய்வேன் என்று சொல்லிக்கொண்டு அன்றுமுதல அவருடன் செல்லுநாள் எல்லாம் அப்படியே செய்வாராகி சென்று முன்னே அடியாரோடும திருவம்பருக்குச் சென்றார். பிள்ளையார் பரமசிவனுடைய திருவருள் வழியே நிற்பாராகி முத்துச்சிவிகையில் ஏறி திருப்புகலூரைக்கடந்துசென்று, அப்பமூர்த்தி எங்கே சென்றார என்று வினவிப் போய், திருவம்பரை அடைந்து மாகாளத்தில் இருக்கின்ற சுவாமியை வணங்கிப் பதிகம்பாடி அப்பமூர்த்தியோடும், அந்தத்திருப்பதியில்இருந்தார்.

---

## திருஅம்பர்மாகாளம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அடையார்புரமூன்றுமனலாய்விழவெய்து,,மடையாரபுனலம்பர்மாகாளம்மேய[னே·
விடையார்கொடியெந்தைவெள்ளைப்பிறைசூடு,சடையான்கழலேத்தச்சாராவினைதா

வெருநீர்கொளவோங்குவேணுபுரந்தன்னுட், டிருமாமறைஞானசம்பந்தன்சேணுர்
பெருமான்மலியம்பர்மாகாளம்பேணி, யுருகாவுளைசெய்வாருயர்வானடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருஆக்கூர் - தான்தோன்றிமாடம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

அக்கிருந்தவாரமுமாடரவுமாமையுந்
தொக்கிருந்தமார்பினன்றோலுடையான்வெண்ணீற்றான்
புக்கிருந்ததொல்கோயில்பொய்யிலாமெய்ந்நெறிக்கே
தக்கிருந்தாராக்கூரிற்றான்றோன்றிமாடமே.

ஆடலமர்ந்தானையாக்கூரிற்றான்றோன்றி
மாடமமர்ந்தானைமாடுஞ்சேர்தண்காழி
நாடற்கரியசீர்ஞானசம்பந்தன்சொற்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

## திருமீயச்சூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காயச்செவ்விக்காமற்காய்ந்துகங்கையைப், பாயப்படர்புன்சடையிற்பதித்தபரமேட்டி
மாயச்சூரனன்றறுத்தமைந்தன்றாதைதன், மீயச்சூரேதொழுதுவினையைவீட்டுமே.

வேடமுடையபெருமானுறையுமீயச்சூர், நாடும்புகழார்புகலிஞானசம்பந்த
பாடலாயதமிழீரைந்துமொழிந்துள்கி, யாடுமடியாரகல்வானுலகமடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாம்புரம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்தசெல்வர்
வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறியேந்தியமைந்தர்
காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண்ணுதல்விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தருநான்மறையாளர்பாம்புரநன்னகராரே.

பார்மலிந்தோங்கிப்பருமதில்சூழ்ந்தபாம்புரநன்னகராரைக்
கார்மலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக்கவுணி
நாமலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தன்செந்தமிழ்வல்லார்
சீர்மலிந்தழகார்செல்வமதோங்கிச்சிவனடிநண்ணுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரையார்விரிகோவணவாடை, நரையார்விடையூர்திநயந்தான்
விரையார்பொழில்வீழிமிழலை, யுரையாலுணர்வாருயர்வாரே.

நளிர்காழியுண் ஞானசம்பந்தன், குளிரார்சடை யானடிகூற
மிளிரார்பொழில்வீழிம்மிழலை, கிளர்பாடவல்லார்க்கில்லைகேடே.

திருச்சிற்றம்பலம்

## திருவீழிமிழலை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சடையார்புனலுடையானொருசரிகோவணமுடையான்
படையார்மழுவுடையான்பலபூதப்படையுடையான்
மடமான்விழியுமைமாதிடமுடையானெனையுடையான்
விடையாரகொடியுடையானிடம்வீழிம்மிழலையே.

வீழிம்மிழலைம்மேவியவிகிர்தன்றனைவிரைசேர்
காழிந்நகர்க்கலைஞானசமபந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசைவல்லார்சொலக்கேட்டாரவரெல்லா
மூழின்வலிவினைபோயிடவுயர்வானடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு அக்கோயிலின் புறத்தணைந்து அப்பமூர்த்தி ஒருமடத்தை அடைய தாம் வேறொரு மடத்திலே போயிருந்தார். அவ்விருவரும் பெருந்துறை திலதைப்பதியென்னும் ஸ்தலங்களுக்குப்போய்த் தரிசனம் செய்து கொண்டு மீண்டும திருவீழிமிழலையில் வந்திருந்தார்கள். இருக்குமநாளிலே சீர்காழியிற் பிராமணர்கள் திருஞானசமபந்த மூர்த்தி சுவாமிகளைக்காணல்வேண்டும் என்னும் ஆசைசெலுத்த, திருவீழிமிழலையை அடைந்து தங்களை எதிர்கொண்ட அவ்வூர்ப்பிராமணர்களோடு கோயிலிலேபோய்ச்சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, அந்நாயனார் இருக்கும் திருமடத்திற் சென்று, அவரை நமஸ்கரித்து சுவாமீ தேவரீர் அடியேங்களோடு சீர்காழிக்கு எழுந்தருளல்வேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். பிள்ளையார் அதுகேட்டு நன்று இன்றுகழிந்து திருவீழிம்மிழலையில் வீற்றிருக்குங் கடவுளுடைய அருளைப் பெற்றுக்கொண்டு திருத்தோணியப்பரை வணங்குதற்கு உங்களோடு வருவேன் என்றார். சீர்காழிப் பிராமணர்களுக்குத் திருவீழிமிழலைப் பிராமணர்கள் விருந்துசெய்தார்கள். தோணியப்பா அன்றிரவு பிள்ளையாருக்குச் சொப்பனத்திலே தோன்றி நாம் திருத்தோணியில் வீற்றிருக்குங் கோலத்தை இத்திருவீழிம்மிழலையிலே உள்ளவிண்ணிழிந்த விமானத்திலே காட்டுவோம்காண் என்று சொல்லி மறைந்தருளினார். பிள்ளையார் விழித்து எழுந்து கோயிலிற்சென்று அங்கே சுவாமியைதாம் முன்னே திருத்தோணியிற் கண்டபடியே கண்டு திருவுளமகிழ்ந்து வினாவுரைப்பதிகம் பாடியருளினார்.

ஸ்ரீபுகலியுந் திருவீழிமிழலையும் - வினவுரை - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற வாணுதல் மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழியா மறையோர்களேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே
யெம்மிறையே யிமையாத முக்கணீசவென் னேசவி தென்கொல் சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறையோர் மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே.

விண்ணிழி கோயில் விரும்பிமேவிய வித்தக மென்கொலி தென்று சொல்லிப்
புண்ணியனைப் புகலி நிலாவு பூங்கொடியோடிருந் தானைப்போற்றி
நண்ணிய கீர்த்தி நலங்கொள் கேள்வி நான்மறை ஞானசம்பந்தன் சொன்ன
பண்ணியல் பாடல்வல்லார்க ளிந்தப் பாரொடு விண்ணுப் பரிபாலகரே.

திருச்சிற்றம்பலம்.

அங்ஙனம் போந்து சீகாழிப்பிராமணர்களை நோக்கி திருத்தோணியப்பர் தாம் விரும்பியிருக்கும் தலங்களெங்கும் சென்று தரிசித்துப் பதிகம்பாடி வருதலின் மேற்கொண்ட மனவிருப்பத்தைக் கண்டு தாம் அங்கே அமர்ந்த திருக்கோலத்தை இங்கே எனக்குக் காட்டியருளினார் நீங்கள் சீர்காழிக்குப் போங்கள் என்றார்.

அதைக்கேட்ட பிராமணர்கள் சீர்காழிக்குப் போய்விட்டார்கள். பிள்ளையார் அப்பமூர்த்தியோடும் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு திருவீழிமிழலையில் இருக்கும்நாளிலே மழையின்மையால் காவிரிப்பெருக்கு இன்மையாலும் பஞ்சம் உண்டாக அதனால் உயிர்களெல்லாம் வருத்தமுற்றன. சிவனடியார்களையும் பசிநோய் வருத்திற்று. அதுகண்டு பாலறாவாயராகிய பிள்ளையாரும் அப்பமூர்த்தியும் பரமசிவனது விபூதியைத்தரித்த அடியார்களுக்கும் இவ்வருத்தம் வருமோ வெனத் திருவுளமிரங்கி பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு அன்றிரவு துயின்றார்கள் துயிலும்போது பரமசிவன் அவ்விருவருக்கும் சொப்பனத்திலே தோன்றி, காலபேதத்தினாலே நீங்கள் மனவாட்டம் அடையீர்களாயினும் உங்களை வழிபடுகின்ற அடியார்களுடைய வருத்தத்தை நீக்கும்பொருட்டு இப்பஞ்சம் நீங்கும் வரைக்கும் நாம் தினந்தோறும் கோயிலின் கிழக்கு வாயிற்படியிலும் மேற்குவாயிற்படியிலும் வெவ்வேறுகாசு உங்களுக்குத் தருகின்றோம் என்று சொல்லி மறைந்தருளினார். பிள்ளையார் விழித்தெழுந்து திருவருளைத் துதித்து அப்பமூர்த்தியோடு கோயிலிற் புகுந்தபோது கிழக்கு வாயிற்படியிலே காசு இருத்தலைக்கண்டு விருப்பத்தோடுந் தொழுது அதனை எடுத்து நாடோறும் சிவனடியார்கள் எல்லாரும் வந்து அமுது செய்யக்கடவர்கள் என்று இரண்டுகாலங்களிலும் பறைசாற்றித்தெரிவித்து தம்முடைய திருமடத்தில்

வரும் அடியார்களுக்குக் கறி, நெய், பால், தயிரோடு அன்னம் இட்டுக் கொண்டு இருந்தார். அப்பமூர்த்தியும் மேற்கு வாயிற்படியில் வைக்கப்படு ங் காசையெடுத்து அப்படியே அடியார்களைத் திருவமுது செய்வித்தார். இப்படி நிகழும்நாளிலே பிள்ளையார் அப்பமூர்த்தியுடைய திருமடத்திலே அடியார்கள் காலம்பெறத் திருவமுது செய்தலைக்கண்டு தமமுடைய திருமடத்திற் பாகுகர்களை நோக்கி நீங்கள்காலம்பெற அமுதுபாகம்பண்ணி இங் கேவரும் அடியார்களுக்குக் கொடாமைக்குக் காரணம்யாது என்றுவினவி யருளினார். பாகுகர்கள் பாலறுவாயரை வணங்கிநின்று சுவாமீ தேவரீர்க் கு அளித்திற் பெறும்படிக்காசைத் தினந்தோறும் பண்டம் வாங்குதற்குக் கொண்டுபோனால் அதற்கு வாசிகேட்கின்றார்கள். அப்பமூர்த்தி பெறுங்கா சையோ வாசியின்று ஏற்றுக் கொள்ளுகிறார்கள். இதனாலே காலந்தாழ்க்கி ன்றது என்றார்கள். பிள்ளையார் அதைக்கேட்டு அப்பமூர்த்தி கைத்தொண் டு செய்தலால் அவர்பெறும் காசு வட்டமின்றி ஏற்கப்படுகின்றது என்றுசி ந்தித்து இனிவரும் நாட்களிலேதரும் காசு வாசிதீரும்பொருட்டுப் பாடு வேன் எனத்திருவுளங்கொண்டார் மறுநாள் கோயிலிலே புகுந்துவாசி தீர் த்தருளும் என்று திருப்பதிகம்பாடி நற்காசுபெற்றார்.

---

### திருவீழிமிழலை - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர், மாசின்மிழலையீ, ரேசலில்லையே.

காழிமாநகர், வாழிசம்பந்தன், வீழிமிழலைமேற், றாழுமொழிகளே.

திருச்சிற்றம்பலம்.

அந்தக்காசைப் பாகுகர்கள் கொண்டுபோய் ஆவணத்திலே காட்ட அங்குள்ளோர் இக்காசு மிகநன்று வேண்டுவனவற்றை நாம்தருவோம் என்றுகொடுத்தார்கள் அன்று தொடங்கிப் பாகுகர்கள் அடியவர்களைக் காலம் பெற அமுது செய்வித்தார்கள் இவருடைய திருமடங்களினும் நாடோறு ம் எண்ணிறந்த சிவனடியார்கள் வந்து திருவமுது செய்து மகிழ்ந்திருக்கு ங் காலத்திலே எங்கும் மழைபெய்து, தானிய முதலியவைகள்மிக விளைந் தமையால் உயிர்கள் எல்லாம் துன்பம் நீங்கி இன்பமுற்றன. திருஞானசம் பந்தமூர்த்தியும் அப்பமூர்த்தியும் சிலநாட் சென்றபின் திருவீழிமிழலை அகன்று திருவாஞ்சியம், தலையாலங்காடு, பெருவேளூர், கரவீரம், விள மர், திருவாரூர், காறாயில், தேவூர், நெல்லிக்கா, கைச்சினம், தெங்கூர், கொ ள்ளிக்காடு, கோட்டூர், வெண்டுறை, தண்டலை, நீணெறி, திருக்களர், முத லிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருப்பதிகம் பாடியருளினார்.

---

## திருவாஞ்சியம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடுகூவிளம்
பொன்னியன்றசடையிற்பொலிவித்தபுராணனா
தென்னவென்றுவரிவண்டிசைசெய்திருவாஞ்சிய
மென்னையாள்வுடையானிடமாகவுகந்ததே.

தென்றனாறுபொழில்சென்றணையுந்திருவாஞ்சியத்
தென்றுநின்றவிறையானையுணர்ந்தடியேத்தலா
னன்றுகாழிமறைஞானசம்பந்தன்செந்தமி
ழொன்றுமுள்ளமுடையாரடைவாருயர்வானமே.

திருச்சிற்றம்பலம்.

## திருப்பெருவேளூர் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அண்ணாவுங்கழுக்குன்றுமாயமலையவைவாழ்வா
விண்ணோருமண்ணோரும்வியந்தேத்தவருள்செய்வார்
கண்ணாவாருலகுக்குக்கருத்தானார்புரமெரித்த
பெண்ணாணாம்பெருமானார்பெருவேளூர்பிரியாரே.

பைம்பொன்சீர்மணிவாரிப்பலவுஞ்சேர்கனியுந்தி
யம்பொனசெய்மடவரலாரணிமல்குபெருவேளூர்
நம்பன்றன்கழல்சேரநவில்கின்றமறைஞான
சம்பந்தன்றமிழ்வல்லார்க்கருவினைநோய்சாராவே.

திருச்சிற்றம்பலம்.

## திருக்கரவீரம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியும்நமவினையுள்ளனவாசற, வரிகொள்மாமணிபோற்கண்டங்
கரியவன்றிகழுங்கரவீரத்தெம், பெரியவன்கழல்பேணவே.

வீடிலான்விளங்குங்கரவீரத்தெஞ், சேடன்மேற்பரிவாற்றமிழ்
நாடிஞானசம்பந்தன்சொல்லிவை, பாடுவார்க்கில்லைபாவமே.

திருச்சிற்றம்பலம்.

## திருவிளமர் - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மத்தகமணிபெறமலர்வதோர்மதிபுரைநுதல்கர
மொத்தநகமணிமிளிர்வதோரரவினரொளிகிள
ரத்தகவடிதொழவருள்பெறுகணனொடுமுமையவள்
வித்தகருறைவதுவிரிபொழில்வளநகர்விளமரே.

வெந்தவெண்பொடியணியடிகளைவிளமருள்விகிர்தனைச்
சிந்தையுளிடைபெறவுரைசெய்ததமிழிவைகெழுமிய
வந்தணர்புகலியுளழகமருமறைஞானசம்
பந்தன்மொழியிவையுரைசெயுமவாவினைபறையுமே.

திருச்சிற்றம்பலம்.

## திருக்காறாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீரானேநீள்சடைமேலொருநிரைகொன்றைக, தாரானேதாமரைமேலயனுரன்றொழு
சீரானேசீர்திகழுந்திருக்காறாயி, லூரானேயெனவல்வினையிலாதாரே. [௫

வாய்ந்தசீரொழிறிகழுந்திருக்காறாயி, லாய்ந்தசீரானடியேயடியருளபெற்ற
பாய்ந்தநீர்காழியுள்ஞானசம்பந்தன்சொல, வாய்ந்தவாறேத்துவாரவானுலகாள்வாரே

திருச்சிற்றம்பலம்.

## திருத்தேவூர் - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பண்ணிலாவியமொழியுமைபங்கனெம்பெருமான்
விண்ணில்வானவர்கோனவிமலனவிடையூர்தி
தெண்ணிலாமதிதவழ்தருமாளிகைத்தேவூ
ரண்ணல்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே

அல்லலின்றிவிண்ணாளவர்கள்காழியர்க்கதிப
னல்லசெந்தமிழ்வல்லவன்ஞானசம்பந்த
னெல்லையில்புகழ்மல்கியவெழில்வளர்தேவூர்த்
தொல்லைநம்பனைச்சொல்லியபத்தும்வல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

## திருத்தேவூர் - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

கார்டெயில்விடுமுடையோடுகனைமுடுமுடையாடை புலிதோ
றேடுபலியூணதுடைவேடமிகுவேதியதிருந்துபதிதா
னாடகமதாடமகிழ்பாடல்வரிகோடல்கைமறிப்பலமார்
சேடுமிகுவேடையெனமுடிமகிழ்மாடமிசைதேவூரதுவே.

துங்கமிகுபொங்கரவுதங்குசடைநங்களிறைதுன்றுகுழலா
செங்கயல்கண்மங்கையுமைநங்கையொருபங்கனமர்தேவூரதன்மேற்
பைங்கமலமங்கணிகொண்டிண்புகலிஞானசம்பந்தனுரைசெய்
சங்கமலிசெந்தமிழ்கள்பத்துமிசைவல்லவர்கள்சங்கையிலரே.

திருச்சிற்றம்பலம்.

திருநெல்லிக்கா - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அறத்தாலுயிர்காவலமர்ந்தருளி,மறத்தான்மதின்மூன்றுடன்மாண்பழித்த
திறத்தாறமெறிவெய்தியதீவெண்டிங்க,ளிறத்தானெல்லிக்காவுள்ளிலாயவனே

புகரேதுமில்லாதபுத்தேளுலகி, னிகராநெல்லிக்காவுள்ளிலாயவனை
நகராநலஞானசம்பந்தனசொன்ன, பகர்வாரவர்பாவமிலாதவரே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைச்சினம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

தையலோர்கூறுடையான் றண்மதிசேர்செஞ்சடையான
மையுலாமணிமிடற்றன்மறைவிளங்குபாடலா
னெய்புலாமூவிலைவேலேந்திவெங்கொளிசேர்
கையுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே.

தண்வயல்சூழ்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
கண்ணுதலான்மேவியுறைகோயில்கைச்சினத்தைப்
பண்ணிசையாலேத்திப்பயின்றவிவைவல்லார்
விண்ணவராயோங்கிவியனுலகமாள்வாரே.

திருச்சிற்றம்பலம்.

திருத்தெங்கூர் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

புரைசெய்வல்வினைதீர்க்கும்புண்ணியர்விண்ணவர்போற்றக்
கரைசெய்மாகடனஞ்சையுண்டவர்கருதலர்புரங்க
ளிரைசெய்தாரழலூட்டியுழல்பவரிடுபலிக்கெழில்சேர்
விரைசெய்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

வெந்தநீற்றினர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தானைக்
கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
சந்தமாயினபாடறண்டமிழ்பத்துமவல்லார்மேல்
பந்தமாயினபாவம்பாறுதறேறுதல்பயனே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கொள்ளிக்காடு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

நிணம்படுசுடலையினீறுபூசிநின், றிணங்குவர்பேய்களோடிடுவர்மானட [ரோ.
முணங்கல்வெண்டலைதனிலுண்பராயினுங், குணம்பெரிதுடையர்நங்கொள்ளிக்காட

நற்றவர்காழியுண்ஞானசம்பந்தன், குற்றமில்பெரும்புகழ்க்கொள்ளிக்காடரைச்
சொற்றமிழின்னிசைமாலைசோர்வின்றிக், கற்றவாகழலடிகாணவல்லரே.

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோட்டூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீலமார்தருகண்டனேநெற்றியோர்கண்ணனேயொற்றைவிரிசடைச்
சூலமார்தருகையனேதுன்றுபைம்பொழில்கள்சூழ்ந்தழகாய்
கோலமாமலர்மணங்கமழ்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சாலநீள்தலத்திடைப்புகழ்மிகத்தாங்குவர்பாங்காலே.

பந்துலாவிரற்பவளவாய்த்தேன்மொழிப்பாவையோடுருவாருங்
கொந்துலாமலர்விரிபொழிற்கோட்டூர்நற்கொழுந்தினைச்செழும்பவளம்
வந்துலாவியகாழியுண்ஞானசம்பந்தன்வாய்ந்துரைசெய்த
சந்துலாந்தமிழ்மாலைகள்வல்லவர்தாங்குருவர்புகழாலே.

திருச்சிற்றம்பலம்.

## திருவெண்டுறை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதியனாதிரையன்னனலாடியவாரழகன்
பாதியோர்மாதினொடும்பயிலும்பரமாபரன்
போதியலும்முடிமேற்புனலோடரவம்புனைந்த
வேதியன்மாதமையாலவிரும்புமிடம்வெண்டுறையே.

திண்ணமரும்புரிசைத்திருவெண்டுறைமேயவனைத்
தண்ணமரும்பொழில்சூழ்தருசண்பையர்தந்தலைவ
னெண்ணமர்பல்கலையானிசைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணமர்பாடல்வல்லார்வினையாயினபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

## திருத்தண்டலைநீணெறி - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

விரும்புந்திங்களுங்கங்கையும்விம்மவே, சுரும்புந்தும்பியுஞ்சூழ்சடையாகிடங்
கரும்புஞ்செந்நெலுங்காய்கமுகின்வளர், நெருங்குந்தண்டலைநீணெறிகாண்மினே.

நீற்றர்தண்டலைநீணெறிநாதனைத், தோற்றமேன்மையர்தோணிபுரத்துறை
சாற்றுஞானசம்பந்தன்றமிழ்வல்லார்மாற்றில்செல்வர்மறப்பர்பிறப்பையே

திருச்சிற்றம்பலம்.

## திருக்களர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

நீருளார்கயல்வாவிசூழ்பொழினீண்டமாவயனீண்டுமாமதிற்
றேறினார்மறுகில்விழாமல்குதிருக்கள
ரூருளாரிடுபிச்சைபேணுமொருவனையொளிர்செஞ்சடைம்மதி
யாரநின்றவனையடைந்தார்கருளாயே.

இந்துவந்தெழுமாடவீதியெழில்கொள்காழிநகர்க்கவுணியன்
செந்துநேர்மொழியாரவர்சேருந்திருக்களரு
ளந்தியன்னதோர்மேனியானையமரர்தம்பெருமானைஞானசம்
பந்தன்சொல்லிவைபத்தும்பாடத்தவமாமே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு வேதாரணியத்தை அடைந்து கோயிலிற்பிரவேசித்து, வலஞ்செய்து வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச்செய்த அந்நாள்முதல் இந்நாள்வரைக்கு அடைக்கப்பட்டே இருக்கின்ற திருவாயிலுக்கு முன்வந்து வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட அக்கதவை அவ்வேதங்களை ஓதும் அடியார்கள் நீக்கப் பெருமையினால் வேறோர்பக்கத்தில் ஓர்வாயிலிட்டு அதன்வழியே செல்கின்றார்கள் என்பதைக்கேட்டறிந்தார்கள் திருஞானசம்பந்தமூர்த்தி அப்பமூர்த்தியை நோக்கி அப்பரே நாம் எப்படியும் சுவாமியைத் திருமுகத் திருவாயில் வழியேசென்று தரிசிக்கவேண்டும் ஆதலால் இந்தக்கதவு திறக்கப்படும்பொருட்டு நீரே திருப்பதிகம்பாடும் என்றார். அப்பமூர்த்தி திருப்பதிகத்தைக் கதவுதிறக்கப்படும் பொருட்டுப் பாட அது திறக்கப்படாமல் தாழ்த்தது. அதுகண்டு "இரக்கமொன்றிலீர்" என்றுதிருக்கடைக் காப்பிலே பாடி வணங்கினார். உடனே வேதாரணியேசுரருடைய திருவருளினால் கதவுதிறக்கப்பட்டது. அப்பொழுது நாயனமார் இருவரும் விழுந்து நமஸ்கரித்தார்கள். அடியார்களெல்லாரும் ஆனந்தகோஷம் செய்தார்கள் நாயன்மார் இருவரும் பேரின்பவெள்ளத்திலே அமிழ்ந்து எழுந்து உள்ளே புகுந்து சுவாமி தரிசனஞ்செய்து திருப்பதிகங்கள்பாடி அரிதில் வெளியே வந்தார்கள். அப்பொழுது அப்பமூர்த்தி திருஞானசம்பந்தசுவாமியைநோக்கி சுவாமியுடைய திருவருளினாலே இந்தக்கதவுதிறக்கப்பட்டும் அடைக்கம்பட்டுமே என்றும் வழங்கும்பொருட்டு தேவரீர் இது அடைக்கப்படும்படி திருப்பதிகம் பாடியருளும் என்றார். திருஞானசம்பந்த சுவாமி திருப்பதிகத்திலே "சதுரமமறை" என்னும் முதற்பாட்டுப் பாடியமாத்திரத்தில் கதவு அடைக்கப்பட்டது.

திருமறைக்காடு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காடுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே.

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே.

திருச்சிற்றம்பலம்.

அதுகண்டு நாயன்மார் இருவரும் திருவருளை வியந்து களிப்புற்று வணங்கினார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினார். அன்றுதொடுத்து அந்தக்கதவும் திறத்தலும் அடைத்தலுமாகிய வழக்கம் ஒன்றும் நிகழ்ந்தது அங்கே நிகழ்ந்த அற்புதத்தைக்கண்ட அடியார்கள் சமஸ்தரும் ஆச்சரியங்கொண்டு உரோமாஞ்சிதங்கொள்ளக்கண்ணீர்சொரிய நாயன்மார் இருவருடைய திருவடிகளிலும் விழுந்து நமஸ்கரித்தார்கள் நாயன்மார் இருவரும் திருமடத்தை அடைந்தபின் திருநாவுக்கரசு சுவாமிகள் பரமசிவன் ஆதியிலே அருளிச்செய்த முதனூலாகிய வேதங்களின் தாற்பரியங்களை அமைத்துத் தமிழ்வேதம் செய்தருளும் சுத்தசாட்குண்ணியராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்தாமே அக்கடவுளைப்போல அருட்செயகை செய்யவல்லவர் அவரொழிந்த எனபோலும் அடியார்களுக்கும் அவ்வேதங்களோடு இடைஈடு பெரிதாகும் அவ்வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட கதவு எனபாடலினால் அரிதிற் திறக்கப்பட்டதும், அவர்பாடலினால் எளிதில் அடைக்கப்பட்டதும் இதனால் அன்றோ என்று சிந்தித்து அருநித்திரைசெய்தார். அப்பொழுது பரமசிவன் அவரிடத்திற சென்று நாம் வாய்மூரிலே இருப்போம் அவ்விடத்திற்குத் தொடர்ந்துவா என்று அருளிச்செய்துபோக அப்பமூர்த்தி அவருக்குப்பின் விரைந்து சென்றார். நெடும்போதுசென்றும் அவரைச் சமீபிக்கப் பெற்றிலர் சுவாமி சமீபத்திலே காட்சிகொடுப்பவர்போல ஒரு கோயிலை எதிரேகாண்பித்து அதனுள்ளே புகுந்தருள அப்பமூர்த்தியும் அவ்விடத்திலே விரைந்துதொடர்ந்தார் பிள்ளையாரும அப்பமூர்த்தி திருவாய்மூருக்குப் போகின்றார் என்று கேள்வியுற்று வந்துசேர்ந்தார் அப்போது பரமசிவன் பார்வதியாரோடு ஆடல்காட்ட பிள்ளையார் தரிசித்துப் பதிகம்பாடியருளினார்.

### திருவாய்மூர் - பண் - நட்டராகம்.

**திருச்சிற்றம்பலம்.**

தளிரிளவளரொளியுமைபாடத்தாளமிடவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னிமேல்
வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே.

திங்களோடருவரைப்பொழிற்சோலைத்தேனலங்கானலந்திருவாய்மூ
ரெங்குமேட்டருமறையொலிபாடலழலினவண்ணர்தம்மடிபரவி
நங்கடம்வினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்றமிழ்மாலை
தங்கியமனத்தினாற்றொழுதெழுவாதவநெடுயுலகுக்கோர்தவநெறியே

திருச்சிற்றம்பலம்.

பின் அப்பமூர்த்தியோடு வாய்மூருக்குப் போய் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, இருந்து சிலநாளாயினபின் வேதாரணியத்துக்குத் திரும்பி வந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு திருப்பதிகம் பாடியங்கிருந்தார்.

---

### திருமறைக்காடு - பண் பியந்தைக்காந்தாரம்.

**திருச்சிற்றம்பலம்.**

பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழ்க்குங்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலமே

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தானைக்
கையினாற்றொழுதெழுவான்காழியுண்ஞானசம்பந்தன
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்த்தவல்லார்
பொய்யில்வானவரோடும்புகவலர்கொளவலர்புகழே.

திருச்சிற்றம்பலம்.

அதுநிற்க. பாண்டிநாட்டிலே பாண்டியராஜன்தான் பூர்வஜன்மத்திலே செய்த தீவினையினால் உலகமெல்லாம் இப்படியே நித்தியமாய் இருக்கும் அருகேசுரன் குருத்துவமாத்திரத்தில் கருத்தாவாய் இருப்பன் எனப் பிதற்றுகின்ற கபடிகளாகிய சமணர்களுடைய துர்ப்போதனையை மெய்யென்று துணிந்து சத்தியமார்க்கமாகிய சைவத்தைவிட்டு அவர்களுடைய அசத்திய மார்க்கமாகிய ஆருகதமதத்திலே பிரவேசித்தான் அரசன் அவ்

